ஸ்ரீ:







ஸ்ரீகாஞ்சிஜகத்குருஸ்வாமி திருவடியான

ப்ரதிவாதிபயங்கரம்

அண்ணங்கராசாரியன்

இயற்றிய

ஜகத்குருஸாவஸ்த்ருஜயத்வஜமென்னும்

# வாதிபீகரவிஜயம்.

---

படியடக்கமுடிபொருக்கம்.

(முதற்பகுதி - அவதாரிகை.)

திருவல்லிக்கேணி

வேதவேதாந்தவர்த்திநீஸபையாருடைய

வித்வத்ஸம்மாந பஹுமாநத்தைக்கொண்டு

சென்னை:

ஆர். ஜி. அச்சுக்கூடத்தில்

அச்சிடுவிக்கப்பட்டது.

---

கலி ௵ 5036 பவ ௵ புரட்டாசித்திருவோணம்.

1934

இதன்விலை 0-4-0

பங்குனிமீ புதன் புஷ்யத்தோடு கூடின சக்லநவமியிலென்றும் பதிப்பிக்கப்பட்டிருந்தது. இதைக் கண்ட சிலர் 'இத்தகைத்தான வருஷலக்கக் குறிப்பின்படி பார்த்தால் தேசிககுமாரருக்கும் முன்னமே அண்ணா பரமபதித்துவிட்டாரென்று சொல்லவேண்டியதாக நேர்கின்றதே? கலிவருஷக்குறிப்பில் ஏதோ பிசகு இருக்கும்போல் தோன்றுகிறது, இதைக் கவனிக்கவேணும்' என்று அடியேனிடம் தெரிவித்தனர். அதன்மேல் ஆராய்ந்து பார்த்ததில் வாஸ்தவமாகவே ஒரு லக்கம் பிசகியிருந்தமை புலப்பட்டது. அந்த ஸமயம் திருநாங்கூர்ஸ்வாமிகள் அண்ணாவைபவாதிகளை அச்சிட்டு முடித்து வெளியிடப்போகிற தருணமாயிருந்தது. அப்புத்தகத்திலும் லக்கப் பிசகு கவனிக்கப்படாமலே அச்சிட்டு முடிக்கப்பட்டிருந்தமையால் அதில் முகப்பில் பிழைதிருத்தம் வெளியிடப்பட்டது. இது நாலைந்து வருஷங்களுக்கு முன்பு நிகழ்ந்த விஷயம்.

இந்தப் பிழைதிருத்தத்தை ஒரு பெரியவிஷயமாக எடுத்துக்கொண்டு ஒரு அய்யபதேச்யர் சென்றவருஷத்தில் **வித்வந்மனோரஞ்ஜன** மென்ற பெயரால் ஒரு சுவடியைக் கிளப்பினார். அதில் அவருடைய முக்கியமான வாதம் எதுவென்றால், பிழைதிருத்தத்திற்கு முன்னே "அண்ணா அவதாரம் கலி 4403 ப்லவஹு க்ருஷ்ணசதுர்த்தசி குருவாரயுக்த புஷ்யத்தில்" என்று வெளியிடப்பட்டிருந்ததே அதுதான் அண்ணாவின் உண்மையான அவதாரகாலம்; பிறகு திருத்தப்பட்டிருக்கிறபடி கலி 4463 ப்லவஹுத்தில் என்பது சிறிதும்பொருந்தாது; திதிவாரநக்ஷத்ரப்பொருத்தம் சோதிடநூற்படி 4403 கலிஹு ஆடிமாதத்திற் பொருந்துகின்றதேயன்றி 4463க்குப் பொருந்தவேமாட்டாதாகையால் இந்தத் திருத்தத்தைச் சோதிடர் பரிஹஸிப்பர். ஆகலால் 4403 ப்லவவருடத்தில்தான் அண்ணா அவதாரமென்பதிணங்கும். ஆகவே, அந்த வருடம்முதல் 92 திருநக்ஷத்ரம் ஜீவித்திருந்து கலி 4496 ஸ்ரீமுகவருஷத்தில் பரமபதித்தவராக எழுதப்பட்டுள்ள அண்ணாவுக்கு மணவாளமாமுனிகளின் ஸம்பந்தம் ப்ராப்தமாகக் கூடிய ஸந்தர்ப்பம்வாய்க்கவில்லை. ஏனென்றால் கலி 4472 ஸாதாரணஹுத்தில் மாமுனிகளின் திருவவதாரமென்பது ஸர்வஸம்ப்ரதிபந்தமாகையால் அண்ணா பரமபதித்த ஸமயத்தில் மாமுனிகளுக்கு 24 திருநக்ஷத்ரமே ஆயிருப்பதாலும் அப்போது அவர் க்ருஹஸ்தராகவே இருந்திருக்கிறபடியாலும், அந்த மாமுனிகள் பரமபதித்த பின்பும் அண்ணா ஜீவித்திருந்தாரித்யாதிகளைச் சொல்லி வைபவங்களெழுதியிருப்பது கல்பனையேயாம் - என்பது வித்வந்மனோரஞ்ஜனகாரருடைய ஒருவாதம்.

இந்தவாதத்தை அடியேன் பலபல ப்ரமாணங்களைக்கொண்டு கண்டித்து, அண்ணாவைபவவிளக்கம சென்ற ஸ்ரீமுகபங்குனியுத்திரத்தில் வெளியிட்டேன். அப்போது அடியேன் வ்யாபகர்களான சோதிடர்களையும் விசாரித்து "கலி4403 ப்லவஹு ஆடிமாதத்திற்கு சதுர்த்தசிகுருவாரபுஷ்ய நக்ஷத்ரயோகம் ஒருநாளும் இணங்கமாட்டாது, 4463க்குத்தான் அது பொருந்

தும்'' என்பதை அப்ரத்ருஷ்யமாகவுந்தெரிந்து கொண்டு எதிரியின்நிர்மூல ப்ரலபிதங்களை அடியறுத்தேன்.

அப்போது அடியேன் பலசோதிடர்களுக்கும் எழுதியிருந்தபடியால், ஸ்ரீரங்கம்பஞ்சாங்கம் கணிப்பவர்களும் ராமநாதபுரம் பஞ்சாங்கம் கணிப்பவர்களும் பரிச்ரமப்பட்டு கணித்துப்பார்த்து, மேலேவெளியிட்டிருக்கிறபடிதான் பொருத்தமானது, பிரதிபக்ஷி கூறுகிறபடி கலி 4403க்குப் பொருந்துமென்பது அஸம்பாவிதம்; 4463க்குப்பொருந்ாதென்பதும் பிசகு. என்பதை கணிதவிவரண ப்ரதர்சநபூர்வகமாகவே(அந்தச் சோதிடர்கள்)விசதமாக எழுதி ஸ்ரீரங்கத்தில்நின்றும் வெளிவருகின்ற திருவரங்கம்பெரியகோயில் பத்ரிகையில் சென்ற ஆடிமாதத்தில் வெளியிடுவித்தார்கள்.

ஆக, அடியேனுடைய புஸ்தகத்தாலும் சோதிடர்களின் புஸ்தகத்தினுலும் எதிரியின்வாதம் தலைகாட்டமுடியாமற் போய்விட்ட பின்பும் எதிரி, தாமும் ஒருபதில்புத்தகம் வெளியிட்டு விட்டதாய்ச் சில பாமரர்களை வஞ்சிப்பதற்குமாத்திரம் பாங்காக படியடக்கெ[illegible]த்தார் சுவடியைக் கிளப்பியுள்ளார். இதில் இவர் எழுதியிருப்பவைகளால்—முன்சுவடியில் இவர்தாம் செய்திருந்தவாதம் பிசகென்பதை இப்போது தாமே நன்கு ஒப்புக்கொள்வதும்; அண்ணா மணவாளமாமுனிகளின் திருவடிகளில் ஆச்ரயித்தவரேயென்பதைத் தாமே இசைந்து பேசுவதுமே ஸ்பஷ்டமாகின்றதென்பதை இங்கு ப்ராமாணிகர்களின் நெஞ்சுகளியக் காட்டுகின்றேன்.

**முதல்விஷயம்=முன்பு எதிரி தாம்கூறியிருந்த விஷயத்தை இப்போது தாமேபிசகென்று பிரகாசப்படுத்தினரென்பது.**

அண்ணா கலி4403ப்லவஷு ஆடிமீ க்ருஷ்ணசதுர்த்தசி வியாழன் கூடின புஷ்யநக்ஷத்ரத்தில் அவதரித்தாரென்று அண்ணாவைபவ நூல்களில் முதலில்பதிப்பிக்கப்பட்டிருக்கிறது. பிறகு பிழைதிருத்தத்தில் கலிஷுமாத்திரம் பூஜ்யஸ்தானத்தில் 6-போடப்பட்டிருக்கிறது. அப்படி பூஜ்யத்தையெடுத்து 6-போட்டால்தான் மற்ற திதிவாரநக்ஷத்ரங்கள் பொருந்துமென்பது வித்தார்திகளின்வாதம். 6-போட்டால் பொருந்தாது, பூஜ்யமாகவே அதாவது 4403-ஆகவேயிருந்தால்தான் பொருந்தும் என்று எதிரியின் வித்வன்மனோபஞ்ஜனத்தில் வாதம். இதைத்திடமாக ஞாபகத்தில் வைத்துக் கொள்ளுங்கள். படியடக்கத்திலெழுதுவது வேறு.

இராமநாதபுரம் - தேவகோட்டைச் சோதிடர்கள் விவாதகிரஸ்த கலிவருஷங்கள் பலவற்றின் வருஷம் மாதம் தேதி திதி வாரம் நக்ஷத்ரம் முதலான ஸகலத்தையும் கண்ணாடிபோல் விளக்கிப் புத்தகம் வெளியிட்டதைக் கண்ட எதிரி இப்போது தமது படியடக்கத்தில்( பக்கம் 13ல்) தாமும் ஒரு காலக்கண்ணாடி பதிப்பித்து, "இதோ நிரூபித்துவிட்டோம்; இனி இவர் என்ன செய்யத் தயார்?'' என்றும் உறுமியிருக்கிறார். 'இவரது முகத்தில் சொட்டுகின்ற அசட்டுச்சிரிப்பை வெளியிடுவதற்கே நாம் தயார்' என்று தான் பதில் எழுதவேண்டியிருக்கிறது.

கண்ணுடையவர்கள்காணலாம்; எதிரி காட்டியிருக்கும் காலக்கண்ணாடியில் கலி 4403ஆமாண்டின் விவரணமும் உள்ளது, 4463ஆமாண்டின் விவரணமும் உள்ளது. நம் முன்னோர் எழுதியிருக்கிற (அண்ணாஅவதார) திதி வார நக்ஷத்திரங்கள் எந்த வருஷத்திற்குப் பொருந்தியிருப்பதாக எதிரியே காட்டியிருக்கின்றார் என்பதைக் கண்திறந்து காணவேணும். [இதில், பிரபவாதி வருஷப்பொருத்தவிஷயத்தை அடுத்தபடியாக எடுத்துக்கொள்வோம்; இப்போது கலிவருஷ நிர்ணயம்மாத்திரமே செய்வோம்.]

அண்ணா அவதாரதினத்தில் வியாழனும் சதுர்த்தசியும் புஷ்யமும் கூட வேண்டுமென்பதும், அப்படி கூடும் தினம் எதுவோ அதுதான் உண்மையாக அண்ணா அவதாரகாலமாகும் என்பதும் எதிரியின்வாதம். நாமும் அதைத்தான் மெச்சுகின்றோம், தடஸ்தர்களும் அப்படிப்பட்ட காலம் எது? என்பதைத்தான் சோதிடர்வாயிலாக அறியவிரும்பியிருக்கிறார்கள். இந்த நிலைமையில் எதிரியானவர் (பக்கம் 13ல்) 4463 கலிவருஷத்தில்தான் வியாழனும் சதுர்தசியும் புஷ்யமும் கூடுகின்றன; 4403ல் செவ்வாய்க்கிழமையேயன்றி வியாழன் இல்லை; என்று கண்ணாடியாய்க் காட்டிவிட்டார்.

ஆகவே கலி 4403ல்தான் அண்ணாஅவதாரமென்று இவர் முன்பு காட்டியிருந்த வாதம் சிதைந்தொழிந்தது. ஒழியவே அதைவிட்டு இப்போது என்ன ஆரம்பித்திருக்கிறாரென்றால், எல்லாம் பொருந்தும்படியாகத் தாமே காட்டியிருக்கிற 4463ல்தான் அண்ணாஅவதாரமென்று தலைப்பொறையாக ஒப்புக்கொண்டு தீரவேண்டிநேர்ந்ததை ஒப்புக்கொண்டுவிட்டால் ப்ராமாணிகத்வம் பிரகாசித்துவிடுமேயென்கிற மஹாபயத்தினால் வேறொருவருஷத்தைத் தேடிப்பிடிக்க ஆரம்பித்தார். அதிலாவது வெற்றி பெறுகிறாரா என்று பார்த்தாலோ, அஃது எங்ஙனே பெறலாகும்? 4403ல் அன்று; 4402ல் அண்ணா அவதாரம் என்று இப்போது எழுதப்புகுந்தார்.

குறிப்பிட்ட திதி வார நக்ஷத்ரங்கள் கூடுகிற தினமே உண்மையான அவதாரதினமாக நிச்சயிக்க உரியதென்பதை நண்பர்கள்! மறந்திருக்கமாட்டார்களே. அந்த 4402க்கு செவ்வாய்தோஷம்கழிந்து வியாழன் வருகிறதென்பதை மாத்திரம் கொண்டாரேதவிர, திதி கூடவில்லையே யென்பதற்கு என்ன விடை கூறுகின்றாரென்பதைத் தடஸ்தர்களே கேட்டறியவேண்டும். எதிரி தாமே (பக்கம் 10ல்) திதி கூடவில்லையென்பதை ஸ்பஷ்டமாக ஒப்புக்கொள்ளுகிறார். 4462க்கு திதி வார மிரண்டுமே கூடவில்லையென்கிறார். அந்த 4462ஆமாண்டைப்பற்றி என்ன விசாரம் வந்திருக்கிறது? இதுவரையில் எதிரியாவது நாமாவது அந்த வருடத்தைப்பற்றிப் பேச்சாகிலு மெடுத்ததுண்டோ? எல்லாம் கூடப்பெற்றதும் எட்டில் எறிவிருப்பதுமான 4463ஆமாண்டைவிட்டிட்டு 4462ஆமாண்டை அநாவச்யகமாகவும் புதிதாகவும் தொட்டுக்கொண்டு அதில் திதி வாரங்கள் கூடவில்லையென்றெழுதுகின்ற எதிரியின் அஸமஞ்ஜஸத்வத்தை என்னென்போம்! திதி வார நக்ஷத்ரங்கள் மூன்றும்

அழகாக அமையப்பெற்றுள்ள 4463ல்தான் அண்ணா அவதாரமென்று எதிரி தாமே நிர்த்தாரணஞ் செய்ததாகத் தேறுகின்றது.

[ப்ரபவாதிவருஷவிசாரம்.]

இதன்மேல் எதிரியின் வாதம் என்னவென்றால், திதி வார நக்ஷத்ரங்களோடுகூட [அண்ணா வைபவநூல்களில் ச்லோகபூர்வகமாகவும் குறிப்பிட்டிருக்கிற] ப்லவவருஷயோகமும் அண்ணா அவதாரகாலத்திற் பொருந்த வேண்டும். கலி ஷூத்தை 4463 ஆகத் திருத்தியும் பயனில்லாதபடி அப்போது சுபக்ருத் ஷூமே யிருப்பதால் ப்லவ ஷூமுள்ள கலிவருஷத்தை நாட வேணும்; அப்போது 4402ல் திதி இணங்காவிடினும் திதி வார மிரண்டு மிணங்காத 4462 ஷூத்தைக் காட்டிலும் திதி ஒன்றுமாத்திரமே இணங்கப் பெறாத 4402ஷூத்தைக் கொள்ளுதல் யுக்தமல்லவா? என்கிற வாதம் சேஷிக்கின்றது.

இந்தவொரு விஷயத்தில்தான் மேதாவிகள் முழுநோக்குவைத்து விஷயங்களை நன்குவாங்கிக் கொள்ளவேண்டுகின்றேன்.—முதல் நூலாகிய வித்வன்மனோபஞ்ஜனத்தில் இவ்விஷயம் அடியோடு எதிரியால் ப்ரஸ்தாவிக்கப்படவேயில்லை யென்பதும், நமது சோதிடர்கள் வெளியிட்ட "அண்ணாவின் கால நிர்ணயம்" என்கிற புத்தகத்தில் (பக்கம் 85ல்) "மற்றொரு ஆராய்ச்சி" என்ற மகுடத்தின் கீழ் நூதனமாகப்ரஸ்தாவிக்கப்பட்ட விஷயமென்பதும் விவேகிகட்குத் தெரியும். 'இதை யார் ப்ரஸ்தாவித்தாலென்ன? விஷயம் ஏறுகிறபக்ஷத்தில் விடையளித்துத்தானே தீரவேண்டும்; ப்லவ வருஷயோகம் அமையவேண்டுவது மிகவும் அவசியர்தானே; 4463க்கு அது அமையவில்லை யென்றால் அந்த வருஷத்தில் அண்ணா அவதரிக்கவில்லை யென்று கொள்ளத்தடை என்ன? என்று தடஸ்தர்கள் கேட்கவே ப்ராப்தம்.

**மிக முக்கியமான சபதம்.**

இதற்கு அடியேன் எழுதுகிற ருஜுவான ஸமாதானம் இணங்காதென்று யார்சொல்லி விட்டாலும் ரூ. 1000 ஆயிரம் பரிசு, ஸத்யம் ஸத்யம். 4463க்கு ப்லவஷூ என்று எதிரியின் வாயைக்கொண்டே அடியேன் ஒப்ப வைக்காவிடில் என் கழுத்திலுள்ளது பூணூலன்று என்றுங்கொள்ளுங்கள்.

பஞ்சாங்ககாரர்களுள் இந்த வருஷநிர்த்தேசத்தில் இரண்டு பிரிவினைகள் [அதாவது அபிப்ராயபேதம்] இருப்பது ஜகத்ப்ரஸித்தம். இப்போது நடக்கிற பவஷூத்திற்கு கலிஷூ என்ன? என்று ஆராயத்தொடங்கி, பஞ்சாங்கங்களை யெடுத்துப்பார்த்தால் ஸ்ரீரங்கம் பஞ்சாங்கம் முதலிய சிலவற்றில் 5035 என்றும், பெருமாள்கோயில் தேவஸ்தான பஞ்சாங்கமாகிய கருங்குளம் பஞ்சாங்கம் முதலியவற்றில் 5036 என்றும் ஸ்பஷ்டமாகக் காணப்படும். இதனால் 4463க்கு சுபக்ருத்ஷூ என்று ஒருசாரார் கொள்கை என்பதும் அதற்குப்லவஷூ என்று மற்றொருசாரார்கொள்கையென்பதும் ஸ்பஷ்டமாகும். 'அண்ணாவின் காலநிர்ணயம்' என்கிற புஸ்தகத்தை வெளி

யிட்ட சோதிடர் ஸ்ரீரங்கம் பஞ்சாங்ககணகர்த்தாவாதலால் தமது கொள்கையின்படி 4463க்கு ப்லவவருஷ இல்லை. சுபக்ருத்வருஷ என்று எழுதினர். அதை எழுதினதோடுகூடவே நமது எதிரிக்கு ஒரு எச்சரிக்கையும் வெகு அழகாகச் செய்திருக்கிறர்—அதாவது—(பக்கம் 87ல்)

"அடியேனுடைய ஆராய்ச்சியில் கிடைத்தவிஷயம் இது. இதை அவலம்பித்துக்கொண்டு இனி பூர்வபக்ஷியானவர் எதாவது அவத்யம் சொல்ல விரும்பினலும் அது பயன்பெருது. ஸகலபூர்வாசார்யர்களுடையவும் காலக்குறிப்பில் இந்தப் பிறழ்வு எறிபேயிருப்பதால் இது ஒரு விஷயமாக எடுத்துக் கொள்ளத்தக்கதேயன்று என்பதைக் காட்டுகின்றேன்."

என்று நமதுசோதிடர் எழுதியுள்ளார். வீணுக அவமானப்படவேண்டாவென்று ராவணனுக்குப்பலர் போதித்தும் பயன்பட்டதோ?

இனி, நம்எதிரி என்ன சொல்லப்போகிறரென்ருல், பஞ்சாங்ககாரர்களுள் வருஷவிஷயத்தில் ஒன்று எற்றக்குறைவாக அபிப்ராயபேதமிருப்பது வாஸ்தவந்தான். ஆனல் அதில் ஒன்றுதான் ப்ராமாணிகம். ஸ்ரீரங்கம் பஞ்சாங்கத்தில் குறித்திருக்கிறதுதான் யுக்தம்; கருங்குளம் பஞ்சாங்கத்திலுள்ளது அநாதரணீயம்; ஆகவே 4463க்கு ப்லவவருஷ இல்லை—என்று வாதிக்கவருவர். இப்போது இப்படிப்பட்ட வாதம் இவரால் செய்யமுடியாதபடி இவர் நெருக்குண்டு கிடப்பதையே இனி இங்கு விவரிக்கின்றேன்.

படியடக்கத்தில் (பக்கம் 20ல்) "அவதார காலஸங்க்யையில் ஒரு லக்கம் புரண்டு விழுந்திருப்பதுதவிர வேறு ஆதாரமுண்டா என்று லக்கத்தின் புரட்சியை (அண்ணங்கராசாரியர்) வெகு லகுவாக நினைக்கிறர். ராஜாங்கமும் லோகமுமெல்லாம் லக்கத்தில்தான் நிற்கிறது. அது புரண்டால் ராஜாங்கமே புரண்டுவிடும் என்பதை இவர் தெரிந்துகொள்ள வில்லைபோலும்" என்றெழுதியிருக்கின்ருர். இதனல் எதிரி லக்கத்தில் மிகவும் ஜாகரூகர், புரளாதவர் என்று காட்டப்பட்டிருக்கிறது. அப்படியேயிருக்கட்டும். இவரெழுதிய முதனூலாகிய வித்வன்மனேரஞ்சனத்தில் (பக்கம் 3ல்) "கலிதுடங்கி 4472-வதான ஸாதாரணவருஷ ஐப்பசி திருமூலத்தில் ஸ்ரீமணவாளமாமுனிகளின் திருவவதாரம்;...கலி 4545 வதான ருத்ரோத்காரிவருஷ மாசி க்ருஷ்ணத்வாதசி ச்ரவணத்தில் பரமபதித்தார்" என்றெழுதியிருக்கின்ருர். படியடக்கத்தில் (பக்கம் 13ல்) 4471ல் மாமுனிகளின் அவதாரமென்று கண்ணுடி காட்டுகிறர். அதிலேயே (பக்கம் 19ல்) 4472ல் என்றும் எழுதுகிறர். இந்த லக்கப் புரட்சிக்கு ஒரு ராஜாங்கமும் புரளாதுபோலும். நான்தான் புரண்டு விட்டேனென்று பதில் கூறுவர் பாவம்!.

எதிரியின் இந்த லக்கப்புரட்சியின் உண்மையை நாம் நிரூபிப்போம். மேலே நாம் விவரித்தவாறு கருங்குளம் பஞ்சாங்கக்குறிப்பின் படியே தான் பூர்வாசார்யர்களின் காலத்தில் ஸம்வத்ஸரகணனை இருந்துவந்ததென்பது இப்போது விளங்கிவிட்டது. எங்ஙனேயென்னில்; மணவாளமா

களின் திருவவதாரம் 4472ல் ஸாதாரண வருஷத்தில் என்று உள்ளது உள்ளபடியே எதிரியும் எழுதிவிட்டார். ஷை கலி வருஷத்திற்கு ஸாதாரண வருஷமா? விரோதிக்ருத் வருஷமா? என்று எதிரியைக் கேட்போம். தவிரவும், மாமுனிகளின் பரமபதயாத்ராவருஷமாக எதிரியே எழுதியிருக்கிற 4445 கலி வருஷத்திற்கு ருதிரோத்காரி வருஷமா? ரக்தாக்ஷி வருஷமா? என்றும் கேட்போம். இவ்விரண்டுகேள்விக்கும் இவர் எந்த சோதிடர் திருவடியைச் சரணம் பற்றி விடையளிக்கப்போகிறாரோ?

யதீந்த்ரப்ரவணப்ரபாவாதிகளிலுள்ளதை எதிரியே எழுதியிருக்கிறபடி 4472க்கு ஸாதாரணவருஷமும் 4545க்கு ருதிரோத்காரிவருஷமும் வரும்போது 4463க்கு ப்லவவருஷம்வரத் தடையென்ன? வேறெந்தவருஷமும்வாராது.

| | |
|---|---|
| 4463 ப்லவ | 4468 பராபவ |
| 4464 சுபக்ருத் | 4469 ப்லவங்க |
| 4465 சோபக்ருத் | 4470 கீலக |
| 4466 க்ரோதி | 4471 ஸௌம்ய |
| 4467 விச்வாவஸு | 4472 ஸாதாரண. |

இங்ஙனமே மாமுனிகளின் பரமபதவருஷத்தையுந்தொட்டுக் குறித்து வந்தால் ப்லவவருஷ மூன்றாய ஸங்க்யையில் வருமேயல்லது இரண்டாய ஸங்க்யையில் ஒருநாளும் வாராது.

இப்படியே தேசிகனவதாரவருஷத்தையுந்தொடங்கிக் குறித்துவந்தால் இந்தவுண்மைதான் வெளிவரும். 4371 சுக்லவருஷ தேசிகனவதாரமென்று இதர ஸம்ப்ரதாயஸ்தர்களின் குருபரம்பரை கூறுகின்றது. 4370 விபவ வருஷத்தில் தேசிகனவதாரமென்று பிற்பட்டவர்கள் எழுதியிருக்கிறார்கள்: நமக்கு இரண்டும் துல்யம். 4370க்கு விபவவருஷ 4371க்கு சுக்லவருஷ என்கிற ரீதியில் 4463க்கு ப்லவவருஷந்தான்வரும். சுபக்ருத்வருஷ வாராது. இப்படியே எந்த ஆசாரியருடைய வருஷத்தைக்கொண்டு பார்த்தாலும் கருங்குளம் பஞ்சாங்கத்தில் குறித்திருக்கும் ஸம்வத்ஸரநிர்த்தேசமே பூர்வாசார்யர்களின் காலத்தில் வழங்கிவந்ததென்பதை ஸர்வேச்வரனும் மறுக்ககில்லான்.

எந்த ஹேதுவினாலேயோ சில பஞ்சாங்ககாரர்கள் ஒருவருஷத்தைக் குறைத்துக் கலிவருஷத்தைக் குறிப்பிட்டுவருகிறார்கள். இதில் எந்தபக்ஷம் யுக்தம்என்பதை ஆராய நமக்குச் சிறிதும் அவசியமேயில்லை. தேசிகன் மணவாளமாமுனிகள்முதலிய ஸகல பூர்வாசார்யர்களுடையவும் வருஷக்குறிப்பைத் திருத்த வேண்டாமலே பொருந்தவிடுகின்ற பஞ்சாங்கமேயுக்தமென்று கொள்ள என்னதடை? கிம்பஹுனா? எதிரிக்கும் கருங்குளம் பஞ்சாங்கமே இப்போது சரணமாயிற்றே. இல்லையென்னில், 4472க்கு ஸாதாரணவருஷமென்றும் 4545க்கு ருதிரோத்காரிவருஷமென்றும் தாமேயெழுதியிருப்பதை எந்தவழியில் ஸ்தாபிக்கிறாரோ, அதைச் சில தலையாட்டிப் பதுமைகளின் முன்னின்று சுவக்கூசல்போடுவதைவிட்டு நான்கு அக்ஷராஸ்யர்முன்னே நின்றுபேசட்டும்.

ஆக இவ்வளவாலும் என்னதேறிற்றென்றால்; 4463 ப்லவ வருஷத்தில் தான் அண்ணா அவதாரம். அப்போதுதான் திதி வார நக்ஷத்ரங்கள் யாவும் பொருந்துகின்றன' வென்று நம் எதிரியே காலக்கண்ணாடியினால் நிரூபணஞ் செய்துவிட்டார். அதற்கு ப்லவவருஷ மாத்திரம் கூடவில்லையென்று எதிரி ஒரு சாரார்கொள்கையை இன்றைக்குத் தழுவி யெழுதியிருந்தாலும் 4463க்கு ப்லவவருஷமேதான் கூடுகின்றதென்று அவரே இசைந்து தீரவேண்டும்படி நாம் ருஜுவான நிரூபணம் செய்துவிட்டோமாதலால், இனி வாய்திறக்க வுண்டோ வழி?

**இனி, இரண்டாவதுவிஷயம் - அண்ணா மணவாள மாமுனிகளை ஆச்ரயித்தவரேன்பதை எதிரிதாமே ஸ்தாபித்திருக்கிறரென்பது.**

படியடக்கம் (பக்கம் 18ல்) எதிரி எழுதுகிறார்;—

"மணவாள மாமுனிகள் பரமபதித்த பிறகு ஜீயர்நயினாருக்கு அண்ணா காலக்ஷேபம் ஸாதித்தாரென்று யதீந்த்ரப்ரவணப்ரபாவத்தில் எல்லாப்பதிப்பிலும் ஸ்பஷ்டமாக இருக்க, மணவாளமாமுனிகள் இருக்கும்போதே காலக்ஷேபம் ஸாதித்ததாகவும் சில வருஷம் கடந்தபின்பு மாமுனிகள் பரமபதித்ததாகவும் ஆசார்யசர்யாம்ருதத்தில் எழுதப்பட்டதற்கு ப்ரமாணமேதோ?"

என்று கேள்விகேட்டிருக்கிறார். நுனி மரத்தில் நின்று அடிமரத்தை வெட்டும் மஹா மேதாவிபோலே இப்படியும் ஒரு கேள்வி கேட்கத் தோன்றுமோ?. 'யதீந்த்ரப்ரவணப்ரபாவம் ஸர்வாத்மநா அப்ராமாணிகம்' என்று எதிரி ஒரு மூலையில் எழுதிவைத்திட்டால் அப்போது இக்கேள்வி தாராளமாகக் கேட்கலாம். "உங்களுக்கு ப்ரமாணமான புஸ்தகத்தின்படிக்கும் நீங்கள் எழுதவில்லையே" என்ற அபிப்ராயத்தின்கீழ் அக்கேள்வியைப் பொருந்தவிடலாம். இவரோ யதீந்த்ரப்ரவணப்ரபாவத்தை இல்லைசெய்யவும் அப்ரமாண மாக்கவும் இன்னமும் துணியவில்லை. பலவிஷயங்களுக்குப் பிரமாணமாகவே அதைக் காட்டுகிறார். 'அது அப்ரமாணமே' என்று இப்போது இவர் சொல்லிவிட்டாலும் போதும். இந்தவாதத்தில் விச்ராந்தனாய் விடுவேன். அந்த ஸ்ரீகோசத்தின் எல்லாப்பதிப்புகளிலும் மாமுனிகள் பரமபதித்த பின்பும் அண்ணா ஜீவித்தெழுந்தருளியிருந்ததாகவும் மாமுனிகளின் சிஷ்யர்களுக்குக் காலக்ஷேபம் ஸாதித்ததாகவும் ஸ்பஷ்டமாயிருப்பதாகத் தாமே உதாஹரித்துக்கொண்டு, "அண்ணாவுக்கு மாமுனிகளின் ஸம்பந்தமில்லாமையின் த்ருடீகரணம்" என்று உபக்ரமோபஸம்ஹாரங்களுஞ் செய்துகொண்டு சுவடியெழுதுகிறவரை என்ன வென்னலாம்? ஸப்தபங்கீஸமயிகள் இக்காலத்தில் எங்கிருக்கின்றனரென்று பலர் தேடுவதுண்டு; இவரேயென்று அறுதியிடலாமே.

இதற்குமேல் நம் எதிரி சொல்லுவது - யதீந்த்ரப்ரவணப்ரபாவத்திற் சொல்லப்பட்ட பயங்கரம் அண்ணா வேறு; அவரை நாம் அபலபிக்கவில்லை;

அவரைப்பற்றின ஸங்கதிகளை நாம் வெளியிட அவசியமில்லை என்று - முதல் நூலில்லாததொரு விலக்ஷணவாதம். இதைப்பற்றி விமர்சிக்க நமக்கும் அவசியமில்லை யென்பதே இதற்கு பதில்.

**இனி அண்ணாவின் பரமபதயாத்ராகாலவிசாரம்.** அண்ணா பரமபதித்த காலத்தை வெளியிடவந்த ப்ராசீநசரமச்லோகமாகிய * ஸுமுகே ஸ்ரீஜயந்த்யாம் ... * என்னும் ச்லோகத்தில் கலிவருஷ நிர்த்தேசமே கிடையாது. அவதார ச்லோகங்களில் மாத்திரம் கலிவருஷ விந்யாஸம் செய்வதுண்டேயன்றி சரமச்லோகங்களில் அது செய்வது பெரும்பாலுங் கிடையாதென்பதை (எதிரியும் உதாஹரித்திருக்கின்ற) மணவாளமாமுனிகளின் சரமச்லோகங்கொண்டு மறியலாம். ஆதலால் இதில் கலிவருஷ விசாராவசயகதை கிடையாது. 4463ல் திருவவதரித்து [92 ஸம்வத்ஸரங்கள் ஜீவித்திருந்து] ஸ்ரீமுகவருஷம் பங்குனி மாதம் புதன்கிழமை புஷ்யயுக்தநவமியில் பரமபதித்தாராக ச்லோகத்தால் ப்ரதிபந்நரான அண்ணாவின் ஷை பரமபதயாத்ராகாலமும் மாமுனிகளின் பரமபத யாத்திரைக்குப் பிறகு வருகிற ஸ்ரீமுகவருஷமேயன்றி வேறாகாது. 4494 கலிவருஷத்தில் அண்ணா பரமபதித்தாரென்று சொல்லி மாமுனிகளின் இளமையிலேயே அண்ணாவின் அவஸாநமாகச் சொல்லவருகிற எதிரிக்குக் காலயோகம் அணுமாத்திரமும் பொருந்தவில்லை யென்பது ஸ்பஷ்டம். எங்ஙனேயென்னில், எதிரி (பக்கம் 13ல்) காட்டியிருக்கிற கண்ணாடிப்படி 4494 பங்குனி சுக்லநவமியில் புநர்வஸு உள்ளதேயன்றிப் புஷ்யமில்லை. ஸாதாரணமாக ஸம்பாவிதமான நாழிகையேற்றத்தாழ்வைக் கொண்டு புஷ்யமும் அன்று கூடிவிடுகின்றதென்றே வைத்துக்கொண்டாலும் வித்வன் மனோரஞ்ஜனப்படி ஷை 4494க்கு ஸ்ரீமுகவருஷம் வரவேவராதென்பது திண்ணம். ஏனென்றால், மாமுனிகளின் பரமபத வருஷமாகிய ருதிரோத்காரி வருஷத்திற்கு, கலிவருஷம் 4545 என்று எதிரியே எழுதுகிறாரே. அதைப பிடித்துக் கணக்கிட்டுப் பாருங்கள்.

| | |
|---|---|
| 4545 ருதிரோத்காரி | 4550 விபவ |
| 4546 ரக்தாக்ஷி | 4551 சுக்ல |
| 4547 க்ரோதன | 4552 ப்ரமோதூத |
| 4548 அக்ஷய | 4553 ப்ரஜோத்பத்தி |
| 4549 ப்ரபவ | 4554 ஆங்கீரஸ |
| | 4555 ஸ்ரீமுக |

எந்த பர்யாயத்திலும் 5-ஸங்க்யையில் ஸ்ரீமுகவருஷம் வருமேயொழிய 4-ஸங்க்யையில் வாராது. வருமென்றால், 4545-க்கு ருத்ரோத்காரி வருஷமென்றும் 4472-க்கு ஸாதாரண வருஷமென்றும் எதிரியேயெழுதியிருப்பது பிசகுதானென்று ஒப்புக்கொள்ள வேண்டும். வேறுகதிமோக்ஷமில்லை. ஒரு லக்ஷம் புரண்டாலும் ராஜாங்கமே புரண்டுவிடுமென்று எதிரியே யெழுதியிருப்பதும் மறக்கலாகாது.

ஆகவே "4494ல் வரக்கூடிய ஸ்ரீமுகவுக்கு" என்று (படியடக்கம் பக்கம் 10ல்) எழுதியிருப்பது முழுமோசம். எல்லாம் பொருந்துகின்ற பரமபத யாத்ராகாலம் மாமுனிகள் பரமபதித்தபின்பு 10 வருடங்கள் கடந்தபின் வருகின்ற ஸ்ரீமுகவருஷமொன்றேயாகும். அதற்கு முந்திய ஸ்ரீமுகவருஷத்தில் ஸர்வாத்மநா அஸம்பாவிதம்—என்கிறவிதுவும் எதிரியின் சுவடியிலிருக்தே ஸ்பஷ்டவித்தவிஷயம் என்று விளக்கிக்காட்டிவிட்டோம். (படியடக்கம் பக்கம் 10ல்) * அப்தே ஸ்ரீமுகநாமகே த்ரமணே * என்கிற சரமச்லோகம் ஒன்றே ப்ராமாணிகம் என்று எதிரி நிஷ்கர்ஷித்தெழுதியிருக்கிறார். இந்த நிஷ்கர்ஷத்தையேதான் அடியேனும் சிரஸா வஹிக்கிறேன். இங்ஙனம் இவர்தாமே ப்ராமாணிகமென்கிற சரமச்லோகப்படி 4494ஆ ஆகவேமாட்டாதென்பது திண்ணம்.

படியடக்கமுடிவில் "முக்கிய அறிவிப்பு" என்ற மகுடத்தின்கீழ் எழுதியுள்ளதெல்லாம் பரம ஆபாஸம். மாமுனிகள் கலி 4472 ஸாதாரணஆல் அவதரித்து 4545 ருதிரோத்காரிஆல் பரமபதித்ததாக வித்வன் மனோபஞ்ஜனத்தில் எழுதின கையைக்கொண்டே இதில் 4471 ஸாதாரணஆல் அவதரித்து 4544 ருதிரோத்காரியில் பரமபதித்ததாக எழுதுகிறீரே, வாய்திறக்க வெட்கமாயில்லையா? என்று கேட்க ஒரு விவேகி இல்லையே!. ஒரு வக்கத்தில் ராஜாங்கமே புரண்டுவிடுமென்று எழுதுகிற சுவடிக்குள்ளேயே (பக்கம் 13ல்) ஸாதாரணவருஷத்திற்கு கலிஆ 4471 என்பது, (பக்கம் 19ல்) 4472 என்பது, (பக்கம் 20, 49ல்) 4471 என்பது, ஆக விப்படிக் குளறிக்கொட்டிவிட்டு 'ஸபையில் வரத்தயார்' என்றும் கைகூசாமல் எழுதுகிற இந்த விலக்ஷணவ்யக்தியை அவசியம் ஒருஸபையில் பார்க்கவேணுமென்றே ஆசை கிளர்ந்திருக்கிறது. இவ்வாசை நிறைவேறும் விஷயத்தில் அடியேன் பரமதௌர்ப்பாக்கியசாலியே.

அஸ்மத்ஸ்வாமி அருளிச்செய்த ஆசார்யசர்யாம்ருதத்தின் முடிவில் *ரஸ நவாப்தி * என்றொரு ச்லோகமிருக்கிறது. இது அந்த ஜகத்குருஸ்வாமி ஸாதித்ததேயன்றி அண்ணா திருக்குமாரர் ஸாதித்ததன்றென்பது அந்த ச்லோகத்தை வாசிக்கிற ரகுவம்ச வித்யார்த்திக்கும் தெரியும். அதற்குமேலே உதாஹரித்திருக்கிற * அப்தே ஸ்ரீமுக நாமகே * என்கிற சரமச்லோகமொன்றுதான் அண்ணரப்பா அருளிச்செய்தது. 'அதனை இதோ உதாஹரிக்கிறேன் பாருங்கள்' என்று சொல்லுகிற பீடிகையாக (காவ்யத்தில்) ஸ்ரீஜகத்குருஸ்வாமி அருளிச்செய்திருப்பதும், "கலி 4496ல் அண்ணா பரமபதித்தார்" என்கிற திருவுள்ளங்கொண்டு நிர்மிதமுமான * ரஸநவாப்தீத்யாதியையும் அண்ணரப்பாவின் கவிதையாகவே ப்ரமித்து எதிரி ஆரவாரஞ் செய்திருக்கிற கோரம் அநுவதிக்கவும் தகாது. "அண்ணரப்பாவால் சொல்லப்பட்ட ச்லோகம் புரண்டுவிட்டதென்றால் அச்சரித்ரத்திற்கு ஒரு குறைவே"என்று (பக்கம் 52ல்) எதிரி எழுதியிருப்பது நிர்மூலப்ரலபிதம். எல்லாவகையானபுரட்சியும் எதிரிபக்கலிலேயே புஷ்கலமென்று கண்ணாடிபோல் காட்டியாயிற்று.

எமதுகோரிக்கையினால் இரண்டு ப்ரபலசோதிடர்கள் கணித்தெழுதி ஸ்ரீரங்கத்தில் வெளியிட்ட "அண்ணாவின் காலநிர்ணயம்" என்கிற புஸ்தகமும் நாமே வெளியிட்டுக்கொண்டதாம். எதிரியின் துர்வாதத்திற்கு இடமறும்படி அந்தச் சோதிடர்கள் எழுதியிருந்தாலும் ப்ரபவாதி வருஷவிஷயமாக அதில் எழுதியிருக்கிற விஷயம் அவர்களுடைய அபிமானப்படியே ஏகதேசிமதமாகையாலும், அந்தக்கொள்கை நமது ஸகலபூர்வக்ரந்தங்களோடும் முரண்படுகிறபடியை நாம் இதில் நன்கு நிரூபித்துக்காட்டி ஸர்வஸம்மதமாம்படி ஒதுக்கியிருக்கிறோமாகையாலும் அநிஷ்டஸம்வலிதமான அந்தக்ரந்தத்தை நாமே எழுதிக்கொண்டதாகச் சொல்லுவது இன்னபுஸ்தகத்தில் இன்னதுவிஷயமென்றுகூடத் தெரிந்துகொள்ளமாட்டாத ஜாட்யவைபவத்தையே வற்புறுத்தும்.

இன்னமும் இவ்விஷயத்தை இங்கு வெகுவிரிவாகவும் அனைவர்க்கும் நன்கு தெரியுமாறும் நிரூபித்துவிடுகிறேன். 'கலியுகம்பிறந்து இப்போது எத்தனை வருஷங்களாயின' என்று விமர்சித்தால் பஞ்சாங்கபேதம்காரணமாக ஒரு லக்கம் ஏற்றத்தாழ்வாக ஏற்படுகிறதென்று முன்னமே மூதலித்தேன். இன்னமும் ஆராய்ச்சிசெய்து தெளிவு பிறப்பிக்கின்றேன். நம்மாழ்வார் கலிபிறந்த நாற்பத்துமூன்றாநாளில் திருவவதரித்தாரென்று உபயஸம்ப்ரதாயஸ்த ஸகலக்ரந்தங்களும் ஏககண்டமாகக் கூறுகின்றன. அப்போது பிரபவாதிவருஷத்தில் எந்தவருஷம்நடந்து செல்லாநின்றதென்றால் **ப்ரமாதீ** வருஷமென்று இதையும் எல்லாரும் ஏககண்டமாகவே நிர்ணயித்தெழுதியிருக்கிறார்கள். "**கலோ: வர்ஷே ப்ரமாத்யாஹ்வயே** * என்றுச்லோகமும் பின்பழகிய பெருமாள்ஜீயர் ஆறாயிரப்படி குருபரம்பராப்ரபாவத்தில் உதாஹரித்தருளியுள்ளார். இப்படி அனேக ப்ரமாணங்களுண்டு. ஆகவே கலியின் முதல்வருஷம் **பிரமாதீ**யேயென்று உபயஸம்ப்ராதாயஸ்தர்களும் நிர்விவாதமாக இசையவேண்டும். இசைந்தேயிருக்கிறார்கள்.

| கலி = ஹு | கலி = ஹு | கலி = ஹு | கலி = ஹு |
|---|---|---|---|
| 1 பிரமாதி | 16 ஜய | 31 ஸௌம்ய | 46 ரக்தாக்ஷி |
| 2 விக்ரம | 17 மன்மத | 32 ஸாதாரண | 47 க்ரோதந |
| 3 விஷு | 18 துர்முகி | 33 விரோதிக்ருத் | 48 அக்ஷய |
| 4 சித்ரபாநு | 19 ஹேவிலம்பி | 34 பரீதாவி | 49 ப்ரபவ |
| 5 ஸ்வபாநு | 20 விலம்பி | 35 ப்ரமாதீச | 50 விபவ |
| 6 தாரண | 21 விகாரி | 36 ஆனந்த | 51 சுக்ல |
| 7 பார்த்திவ | 22 சார்வரி | 37 ராக்ஷஸ | 52 ப்ரமோதூத |
| 8 வ்யய | 23 ப்லவ | 38 நள | 53 ப்ரஜோத்பத்தி |
| 9 ஸர்வஜித் | 24 சுபக்ருத் | 39 பிங்கள | 54 ஆங்கிரஸ |
| 10 ஸர்வதாரி | 25 சோபக்ருத் | 40 காலயுக்தி | 55 ஸ்ரீமுக |
| 11 விரோதி | 26 க்ரோதி | 41 ஸித்தார்த்தி | 56 பவ |
| 12 விக்ருதி | 27 விச்வாவஸு | 42 ரௌத்ரி | 57 யுவ |
| 13 கர | 28 பராபவ | 43 துர்மதி | 58 தாது |
| 14 நந்தந | 29 ப்லவங்க | 44 துந்துபி | 59 ஈச்வர |
| 15 விஜய | 30 கீலக | 45 ருதிரோத்காரி | 60 பஹுதாந்ய |

இந்த வருஷக்கண்ணுடியை நன்ருய்க்கண்டுகொள்க. பிரபவாதிவருஷங்களில் இதுவரை எத்தனையோ பர்யாயங்கள் கடந்தாலும் (அதாவது, அறுபது அறுபதாகப் பல அறுபதுகள்கடந்தாலும்) மேலே கண்ணுடியில் நாம்காட்டியிருக்கிறபடி கலிவருஷமும் பிரபவாதிவருஷமும் எந்த பரியாயத்திலும் அந்தக்கணக்குக்குத்தான் சரியாகக்கூடும். அதாவது கலிஞூ 343க்கு ப்ரபவாதிஞூ என்ன? என்று ஒருவன் அறியவிரும்பி கணக்கிட்டுப்பார்த்து ஏதோ ஒருவருஷத்தை நிச்சயித்தால், அது உண்மையில் தப்பாகஇருந்தால், அப்படி அது தப்புதான் என்பதை ஒருக்ஷணத்தில் நாம்கண்டுகொள்ளலாம். எப்படி? மேலேகாட்டினகண்ணுடிதான் அதற்குப்பொருத்தமான உபாயம். கலிஞூ 343க்கு விச்வாவஸுஞூ என்று ஒருவன்சொன்னுல் உடனே ஷை கண்ணுடியில்பாருங்கள். 3, 13, 23, 33, 43, 53, இந்த ஆறுலக்கங்களில் ஏதாவது ஒருலக்கத்திற்கு நேராகவாவது விச்வாவஸுஞூ இருக்கிறதா? என்றுபாருங்கள். உண்டு இல்லையென்பதை ஒருக்ஷணத்தில்கண்டறியலாமன்ருே? இல்லையாயின் 'அது தப்புதான்' என்று உடனே நிர்மானமாகச் சொல்லிவிடலாம்.

இந்நேர்தியில் ஸகல ஆசார்யர்களுடையவும் வருஷக்குறிப்புகளை நாம் ஒரு நொடிப்பொழுதில் சோதித்துவிடலாம். (உதாஹரணம் கவனிக்க.) மணவாளமாமுனிகளின் திருவவதாரம் ஸாதாரணவருஷத்தில் என்று எல்லாருக்கும் ஸ்பஷ்டமாய்த்தெரியும். அந்த வருஷத்திற்கு கலிஞூ என்ன? என்றுகேட்டால், கணக்கிட்டுப்பார்த்து ஒருவர் 4471 என்றும், மற்றொருவர் 4472 என்றும் விடையளித்தால் உடனே ஷை கண்ணுடியைப் பார்க்க, அதில் ஸாதாரணவருஷமானது ஒற்றைப்பட்ட கலியுகலக்கத்திற்கெதிரே இல்லாமல் இரட்டைப்பட்ட லக்கத்திற்கெதிரேதான் இருப்பதால் ஸாதாரணவருஷத்திற்கு கலிஞூ 4471 அல்ல 4472தான்—என்று நிர்மாணிக்கத் தடையே கிடையாது. ஆகவே எதிரி 4472 என்றும் 4471 என்றும் முன்னும்பின்னும் முரணுக எழுதிவெளியிட்டிருப்பதில் 4472 தான் உள்ளது என்பதும் இதனுல் விசதமாயிற்று.

யுகாந்தரத்தில் அவதரித்த நான்குஆழ்வார்களைத் தவிர்த்து இந்தயுகத்தில் அவதரித்த மற்ற ஆழ்வார்களுக்கும் ஸ்ரீமந்நாதமுனிகள் தொடங்கி ஸ்கல ஆசார்யர்களுக்கும் கலிவருஷமும் பிரபவாதிவருஷமும் உபயஸம்பிரதாயத்திலும் அனேக புஸ்தகங்களில் பிராசீனர்களும் நவீனர்களும் குறித்திருக்கின்றனர். அதையும் அடியேன் இதோவ்ரிசையாக எழுதிக்காட்டுகிறேன். [சரியா? தப்பா? என்பதை கீழேபக்கம் 11ல் நான் காட்டின ஸதுபாயக் கண்ணுடியைக்கொண்டு நிர்ணயித்துக்கொள்க.]

## முன்னோர்களின் ஸகலக்ரந்தங்களிலு முள்ளபடி

## ஆழ்வாராசாரியர்களின் வருஷக்குறிப்பு.

| திருநாமங்கள் | கலி ௵ பிரபவாதி ௵ | திருநாமங்கள் | கலி ௵ பிரபவாதி ௵ |
|---|---|---|---|
| நம்மாழ்வார் | 1. பிரமாதி | எம்பார் | 4127 க்ரோதந |
| குலசேகராழ்வார் | 28 பராபவ | அனந்தாழ்வான் | 4155 விஜய |
| பெரியாழ்வார் | 47 க்ரோதந | பிள்ளான் | 4163 ப்லவ or 4169 ப்லவங்க |
| ஆண்டாள் | 98 நள | கிடாம்பியாச்சான் | 4159 ஏவிளம்பி |
| தொண்டரடிப் பொடிகள் | 289 ப்ரபவ | பட்டர், சீராமப்பிள்ளை | 4224 சுபக்ருத் 4164 ஷை |
| திருப்பாணாழ்வார் | 343 துர்மதி | நஞ்சீயர் | 4215 விஜய |
| கலியன் | 398 நள | எங்களாழ்வான் | 4208 வ்யய |
| ஸ்ரீமந்நாத முனிகள் | 3685 சோபக்ருத் | அம்மாள் | 4267 பார்த்திவ |
| உய்யக்கொண்டார் | 3928 பராபவ | நம்பிள்ளை | 4249 ப்ரபவ or 4309 ஷை |
| மணக்கால்நம்பி | 3933 விரோதிக்ருத் | வடக்குத்திருவீதிப்பிள்ளை | 4269 ஸர்வஜித் 4329 ஷை |
| ஆளவந்தார் | 4018 தாது | பெரியவாச்சான்பிள்ளை | ஷை |
| பெரியநம்பி | 4099 ஏவிளம்பி | கிடாம்பி அப்புள்ளார் | 4322 விக்ரம |
| திருமாலையாண்டான் | 409[illegible]ர்வதாரி | பிள்ளைலோகாசாரியர் | 4307 க்ரோதந 4367 ஷை |
| திருக்கோட்டியூர்நம்பி | 4089 ஸர்வஜித் | அழகியமணவாளப் பெருமாள்நாயனார் | 4309 ப்ரபவ 4369 ஷை |
| திருவரங்கப் பெருமாளரையர் | 4059 பிங்கள | வேதாந்ததேசிகன் | 4371 சுக்ல or 4370 விபவ |
| திருமலைநம்பி | 4075 ஸ்ரீமுக | நயினாராசார்யர் | 4418 நள |
| திருக்கச்சிநம்பி | 4105 சோபகிருத் | திருவாய்மொழிப்பிள்ளை | 4401 விகாரி |
| எம்பெருமானார் | 4119 பிங்கள | மணவாளமாமுனிகள் | 4472 ஸாதாரண |
| கூரத்தாழ்வான் | 4132 ப்ரமோதூத | | |
| முதலியாண்டான் | 4129 ப்ரபவ | | |

பூருவர்களின் க்ரந்தங்களிலும், ப்ராந்தாநுஸந்தான தீபிகை, பழ நடை விளக்கம் முதலான ஸ்வீகக்ரந்தங்களிலும், தமிழ்வித்வான் வைத்தமாநிதி முடும்பை சடகோபராமாநுஜாசாரியர்ஸ்வாமியும் சே. கிருஷ்ணமாசாரியர் ஸ்வாமியும் ப்ராசீனக்ரந்தங்களைக்கொண்டு பலகால் சோதித்தெழுதியதாக வெளியிட்டுள்ள பத்ரிகையிலும், 1913ஷ்த்தில் வெளிவந்திருக்கும் வேதாந்த தேசிக வைபவப்ரகாசிகையிலும் மற்றும் பலநூல்களிலும் உள்ள குறிப்புகளைத்தான் அடியேன் அப்படியே இங்குக் காட்டியிருக்கிறேன். புஸ்தக பேதக பக்ஷபேதமாகக்கண்ட இடங்களில் அந்த இருவகைப்பக்ஷங்களையும் அப்படியே குறிப்பிட்டிருக்கிறேன். பிள்ளான், தேசிகன் இவ்விருவருடைய அவதார வருஷக்குறிப்பில் பக்ஷபேதக ஸ்வல்பவ்யத்யாஸமே காண்கிறது. பட்டர், சீராமப்பிள்ளை. நம்பிள்ளை, வடக்குத் திருவீதிப்பிள்ளை, பெரிய வாச்சான்பிள்ளை, பிள்ளை லோகாசாரியர் ஆகிய ஆறு திருநாமங்களின் அவதாரக்குறிப்பில் பக்ஷபேதக அறுபது அறுபது வருஷங்கள் வ்யத்யாஸப்படுகின்றன. அந்த பக்ஷத்வயங்களில் எந்தப் பக்ஷம் யுக்தமோ அதை மாஹான்கள் பரிஷ்கரித்து நிர்ணயித்துக்கொள்வது. அந்த விஷயங்கள் இப்போது அப்ரஸக்தம். ஷை பக்ஷபேதங்களிலும் எதிரிக்கு அநுகூலமான வருஷ நிர்த்தேசம் சிறிதுங்கிடையாது.

எதையும் தீர ஆராய்ந்தே நிஷ்கல்மஷமாக வெளியிட்டருள்பவரும் ப்ராமாணிகாக்ரேஸரரும் அபரபாஷ்யகாரருமான ஸ்ரீமதுபய வே. திருமலை அனந்தாண்பிள்ளை. புரிசை ஸ்ரீரங்காசாரியர்ஸ்வாமி உபய பாஷைகளிலும் வெளியிட்டருளியிருக்கிற [ஸ்வகுலகூடஸ்த] அனந்தாழ்வான் வைபவத்தில்- கலி 4119 பிங்கள வருஷத்தில் எம்பெருமானார் திருவவதாரமென்றும் 4155 விஜய வருஷத்தில் அனந்தாழ்வான் திருவவதாரமென்றும் ஸப்ரமாணமாக அருளிச் செய்திருக்கிறார். அந்த க்ரந்தமுமுட்பட ஸகல க்ரந்தங்களாலும் அடியேனுடைய நிருபணமே மெய்ப்பிக்கப்படுகின்றதென்பதை ப்ராமாணிகர்கள் எவ்வளவேனும் பரிசீலித்தறியலாம். மேலே நாம் விவரித்தபடி பட்டர் முதலான ஆறு திருநாமங்களின் காலக்குறிப்பில் அறுபது வருஷங்கள் வ்யத்யாஸப்படவேண்டிய காரணத்தை எதிரி விமர்சித்து வெளியிடுவாரா?

இப்போது அண்ணா அவதார ஷ்த்தைப்பற்றி எடுத்துக்கொள்வோம். ப்லவஷ ஆடிமீ க்ருஷ்ணசதுர்தசி புஷ்யநக்ஷத்ரம் வியாழக்கிழமை இவை கூடுகிற கலிவருஷம் எது? என்பதை இப்போது வெகு சுலபமாக நிர்ணயிக்கலாமே. எதிரி முதல்நூலில் தெரிவித்தபடி 4403ஷ அவதார வருஷமல்ல என்பதை அவரே இப்போது (படிபடக்கம் பக்கம் 13ல்) காட்டிவிட்டார்— வியாழக்கிழமை யில்லை யென்பதுபற்றி. 4402 ம் அல்ல என்றும் காட்டிவிட்டார் சதுர்த்தசி யில்லை யென்பதுபற்றி.

இனி அடுத்தபரியாயத்திற் சென்று பார்க்கவேண்டியது அவசியமாயிற்று. நாமும் சோதிடர்களும் நிர்ணயித்திருக்கிறபடி 4463க்குத்தான் வியாழன் சதுர்தசிபுஷ்யங்கள் பொருந்துகின்றனவென்று எதிரியும் அதே

பக்கத்தில் விளக்கியிருக்கிருர். கடைசியாக என்ன வாதம் சேஷிக்கின்ற தென்ருல் அந்த 4463க்கு அண்ணவைபவங்களிற் கூறியபடி ப்லவஸூ இல்லை, சுபக்ருத் ஸூதான், ஆகையால் அது அவதார வருஷமல்ல என்று எதிரி கூறுவதைச் சோதிக்கவேண்டியதொன்றே சேஷிக்கின்றது. இந்த வாதத்திலுள்ள பிசகையும் வஞ்சனையையும் விளங்கக் காட்டுவதற்காகவே கீழே அடியேன் பல காலக் கண்ணடிகள் காட்டியிருக்கின்றேன். மற்ற எல்லா ஆசார்யர்களுடைய்வும் வருஷங்களைச் சோதித்த விதமாகவே இதை யும் சோதித்து ஒரு க்ஷணத்தில் உண்மை யுணர ஒரு தடையுமில்லையே. அக்கண்ணடியில் சுபக்ருத்ஸூ இரட்டை லக்கத்தில் வருவதாலும் ப்லவ வருஷமே ஒற்றை லக்கத்தில் வருவதாலும் எதிரி வாதம் சிதறியொழிந்த தென்று செவ்வனே செப்புமின்.

கலிவருஷத்திற்கும் பிரபவாதி வருஷத்திற்கும் (நாம் காட்டியிருக்கிற கண்ணடிப்படி யன்றியே) ஒரு லக்கம் மாறுபாடாக வரும்படியாய் சில பஞ் சாங்கங்கள் காட்டுவதற்கான காரணத்தையும் இங்கு நிரூபித்து விடுகிறேன் காண்மின். கலியின் முதல்வருஷத்தில் திருவவதரித்த நம்மாழ்வாருடைய வருஷத்தை ப்ரமாதி வருஷ மென்று பலபுத்தகங்கள் ச்லோகபூர்வகமாகவும் கூறியிருக்கச் செய்தேயும் ஒரு புஸ்தகம் அந்தப்ரமாதி வருஷஸ்தானத்தில் பஹுதாந்யவருஷத்தை எழுதிவைத்தது. அதைப்பார்த்து அதற்கிணங்கவே வருஷத்தைப் பெருக்கிக்கொண்டுபோய்க் கணக்கிட்டவர்கள் ஏதோவொரு விதமாய் மயங்கியிருக்கவேண்டும்:கருங்குளம் பஞ்சாங்கக்காரர் மற்ற எல்லாப் பஞ்சாங்கக் காரர்கட்கும் பிற்பட்டவராதலால் சிலமஹான்களின் உத்போ தநத்தையும் பெற்று இவ்விஷயத்தை விமர்சிக்க ஆரம்பித்து உள்ளபடியே கணக்கிட்டுத் தாம் பிரசுரிக்கத்தொடங்கினர். முன்பஞ்சாங்கக்காரர்கள் விக் ரமவருஷத்தைக் கலி முதல்வருஷமாகக்கொண்டு கணக்கிட்டிருக்கிருர்கள் போலும். அதற்கு ஆதாரம் அறிகின்றிலோம்.

"பஹுதாந்ய வருஷத்தைத்தான் கலியுகாதி வருஷமாகக் கொண்டு கணக்கிடவேணும் §; பிரமாதிவருஷத்தைப் பிடிக்கலாகாது" என்று மூன் ருவதான ஒருவழியில் நம்எதிரி மெல்வதற்கும் இடமில்லாதபடி மணவாளமா முனிகளின் அவதார வருஷத்தையும் பரமபதவருஷத்தையும் கருங்குளம் பஞ் சாங்கரீதியிலேயே தாமே குறிப்பிட்டுவிட்டு இப்போது திருமாலிருஞ்சோலை யழகர் விழி விழிக்கிரு ரித்யாதிகள் முன்னமே ஸூவிசதம்.

எதிரி (பக்கம் 11ல்) "ஆசார்யர்களின் காலவிஷயத்தில் காலவிபர்யயங் கள்இருப்பதாக இவர்சொல்லிவிடுவதால் இவர்களின் அண்ணாவின்காலத்

§ நம்மாழ்வாரவதாரம் பஹுதாந்ய வருஷத்திலென்று குறித்திருக்கிற ஒரு புஸ்தகத்தில் பெரியோர்கள் பலவகை ஆராய்ச்சிகளைக்காட்டி ப்ரமாதி வருஷமேதான் இங்கு உத்திஷ்டம் என்று டிப்பணி எழுதிவைத்திருப்பது நோக்கத்தக்கது. அது ஸ்ரீ: வைத்தமாநிதி அப்பங்கார்ஸ்வாமியின் டிப்பணி.

தை நிர்த்தாரணம்செய்ததாக ஆய்விடுமென்று எண்ணுகிறாரா? தப்பைக் கொண்டு தப்பைஸாதிப்பதென்றால் உலகத்தில் தப்புகளே கிடையாதென்ற தாய்விடுமல்லவா?" என்று எழுதுகிறார். நிரர்த்தக சுஷ்க சப்தராசிகளைத் தெருக்கூசல்களிலே வாரியிறைக்கிறாரே, அப்படியே எட்டிலுமெழுதி விட்டார். ஆசார்யர்களின் காலவிஷயத்தில் விபர்யயங்களிருப்பதாக அடியேனெழுதியிருக்கிறேனும்; நாமெழுதாததை எதிரி வேணுமென்று ஏறிட்டுஎழுதியிருப்பதாக அடியேன் எண்ணவில்லை; அடியேன் விளக்கநூலில் எழுதியிருந்தவற்றுக்கு இவர் அர்த்தம் க்ரஹித்த அழகு இது-என்றே எண்ணுகிறேன். 'இது ஸ்வோக்தி, இது பரோக்திகளின் அநுவாதம்' என்பதைக்கூட அறியகில்லாதே ஆரவாரிப்பதுமுண்டோ? அது ஸ்வோக்தியாகவேயிருந்தாலும், தப்பைக்கொண்டு தப்பை ஸாதிப்பதென்கிற பேச்சுக்கு இங்கு இடமேது? * யஶ்சோபயோஸ்ஸமோ தோஷ: பரிஹாரோபி வா ஸம: நைக: பர்யநுயோக்தவ்ய: தாத்ருகர்த்தவிசாரணே * என்பது மஹா சாஸ்த்ரஜ்ஞர்களின் நியமநம். இதற்கு இலக்காகுமாறு அடியேன் எழுதியிருந்ததை உணராதவற்கு உரைப்பதெல்லாம் ஊமையரோடு செவிடர்வார்த்தை.

எதிரி (பக்கம் 35ல்) "சரித்திரத்திற்கும் காலத்திற்கும் முரண்பாடு உண்டானால் சரித்திரத்திற்கு ப்ராபல்யம்கொடுக்கிற இவர்களின் புத்தியின் கூர்மையே கூர்மை! இவர்கள்சொல்லுகிற காலத்தில் இவர்கள்சொல்லுகிற வ்யக்தி இருந்தாலன்றோ அவரைப்பற்றிய சரித்திரம் நிலைநிற்கும்; வ்யக்தியே இல்லாவிட்டால் சரித்திரம் யாரைப்பற்றிநிற்கும்?" என்கிறார். ஆராய்ச்சிமுறைமை இன்னதென்பதே இவர்க்குத் தெரியாது. 'லக்கம் புரண்டு விழுந்திருக்கின்றது' என்பதா காலஆராய்ச்சி. அந்தோ! இதுகேளீர்; தேசிகனுக்கும் க்ருஷ்ணமிச்ரனுக்கும் நேரே வாதம் நிகழ்ந்ததாகப் பிறர் எழுதிவைத்திருந்தார்கள். அது ஸுதராம் அஸம்பாவிதமென்று அடியேன் பாதுகாஸஹஸ்ராவதார தத்துவத்தில் (பக்கம் 12, 13களில்) நிரூபித்தேன். எப்படி நிரூபித்தேன். பிறர் மறுவாய்திறக்க வழியில்லாதபடியும், மெய்யே என்று தலைசாய்க்கும்படியும் நிரூபித்தேன். க்ருஷ்ணமிச்ரனுடையதான ப்ரபோத சந்த்ரோதயநாடகம் தேசிகனுக்கு வெகு முற்காலத்திலே[illegible] பாடப்ரசாரத்திலிருந்ததென்பதை, தனிச்லோகியில் * ஶ்ருத்வாஶ்ரோக வியாக்கியானத்தில் * ஸஹஸ்ராம்ஶே ஜாத: ஸவதி ஸஹஜஸ்தாத தநயாம் ஸ்வஜாநாமேஷ [illegible] யாஸீத் ஸஹஜ-[illegible] * என்கிற ப்ரபோதசந்த்ரோதயச்லோகம் (தேசிகனுக்குமுற்பட்ட) பெரியவாச்சான்பிள்ளையினால் உதாஹரிக்கப்பட்டிருப்பதையெடுத்துக்காட்டி, அவ்வளவோடும்நில்லாமல்,

* தேஶிகக்ருஷ்ணமிஶ்ரயோ: காலவிப்ரகர்ஷஸ்ய ப்ராமாணிகத்வேऽபி [illegible] ஸ்வாமிநா: தயாஹி; [illegible] வேங்கடநாயகஸ்ய [illegible]

ஶ்ரஸ்ய காலே ப்ரபோதசந்த்ரோதயः ப்ரணீயதேதி தத
ஶ்ச ஸ்பஷ்டம் । ஸ ச கீர்த்திவர்மா சந்தேலராஜகே ப்ரஸ்தாவீ
யே ஸம்வத்ஸரே சந்த்ராத்ரேயவம்ஶீயோ ராஜேதி ஐதிஹா
ஸிகாः. வேதாந்ததேஶிகாஸ்து ப்ரஸ்தாவீய த்விதீயஶத
கஸ்ய ... (A. D. 1268) ஸம்வத்ஸரா இதி ததீயசரி
த்ரக்ரந்தேஷு ... ॥ ஏவஞ்ச க்ருஷ்ணமிஶ்ராத் பஹுவர்ஷா
நவீநா வேதாந்ததேஶிகா இதி ஸ்பஷ்டம் ॥

என்று ராஜாங்கசாஸந நிரூபணபூர்வகமாக நிலைநாட்டினேன். இதன்பலன் என்னுயிற்றென்றால், இந்த ஆராய்ச்சியை அடியேன் வெளியிடுவதற்கு முன்னே ஸங்கல்பஸூர்யோதயபீடிகையில் தேசிகனுக்கும் க்ருஷ்ணமிச்ரனுக்கும் நேரே விவாதம்நடந்ததாகவும் அப்போதுதான் ப்ரபோதசந்த்ரோதயநாடகத்தை அவன்எழுதிக்கொண்டுவந்துகாட்டினதாகவும் கல்பித்தகதையை எழுதிவெளியிட்டிருந்த திருவயிந்திரபுரம் சேட்லூர் ஸ்ரீமாந் நரஸிம்ஹாசாரியர், இந்த ஆராய்ச்சியை அடியேன் வெளியிட்டபிறகு (சென்ற ஆங்கிரஸ வருஷத்தில் (அவரே) **தேசிகசரித்ரவிமர்ச** மென்றொரு புஸ்தகம் வெளியிட்டு, அதில் (பக்கம் 137ல்) **க்ருஷ்ணமிச்ரநிரஸநம்** என்ற மகுடத்தின் கீழ்,

"ஸ்வாமி க்ருஷ்ணமிச்ரனை ஜயித்ததும் அவன்தானெழுதிய ப்ரபோதசந்த்ரோதய நாடகத்தைக் காட்டினதாக வைபவப்ரகாசிகாதிகளில் நிரூபிக்கப்பட்டிருக்கிறது. ஆனால், ப்ரபோதசந்த்ரோதயநாடகத்தை எழுதிய க்ருஷ்ணமிச்ரன் (கி. பி.) பன்னிரண்டாம் நூற்றாண்டின் இறுதியிலும் பதின்மூன்றும் நூற்றாண்டின் ஆரம்பத்திலும் இருந்தவனென்றும், அந்த நாடகம் கலி 4301. கி. பி. 1200) ஞூத்தில் எழுதப்பட்டது என்றும் விமர்சகர்களினாலே நிஷ்கர்ஷிக்கப்பட்டிருப்பதினால் **அந்தக்கவி ஸ்வாமியுடன் நேரில்வாதம் செய்திருக்கமுடியாது."**

என்று எழுதி நாடெங்கும் பரவவிடும்படியாயிற்று. "அண்ணங்கராசாரியர் நிரூபணம் செய்துவிட்டா ரென்பதற்காகவே இப்படிகூட நிர்லஜ்ஜமாய்த் தாமெழுதியிருந்த கதையைத் தாமே மறுத்து எழுதிவிடலாமா?" என்றும் அந்த சேட்லூர்ஸ்வாமியின்மேல் வேறொரு ஸஜாதீயர் புஸ்தகம் வெளியிட்டிருக்கிறார். அவரோ எதற்கும் வாய் கை திறப்பதில்லை.

ஒருவருடைய காலத்தை நிரூபணம்செய்வதென்றால் இப்படியன்றோ ஸப்ரத்யக்ஷசாஸநங்களைக்காட்டி, பிறரின் வாயைக் கையைக் கட்டி நிரூபிக்கவேண்டும். இங்ஙனே, ஒரு சரக்குமில்லாமல் பொறாமையொன்றையே பெரியசாஸநமாகக்கொண்டு இழிந்தவர்களுக்கு எங்ஙனே வெற்றி கிடைக்கும்?

மேலேவிவரித்தவிதமாக அடியேன் க்ருஷ்ணமிச்ரன் விஷயமாகப் பிரசுரஞ்செய்திருந்ததைக் கண்ட கும்பகோணம் கோமளாம்பா அச்சுக்கூடத் தொழிலாளர்முதலான சிலர் அதன்மேல் விஷயஞ்சொல்ல முடியாமலும் வருத்தம் தாங்கமாட்டாமலும், பிரதியாக ஏதேனுமொன்றுசெய்து தரிக்க வேண்டியும் அவர்களே இந்த அபத்தச்சுவடிகளைக் கிளப்பித் தமது அச்சுக் கூடத்தில் பதிப்பித்து இதனால் ஒருவாறு த்ருப்தியடைகின்றார்களென்றும் சிலர் தெரிவிக்கின்றார்கள். உண்மையை ஆராவமுதனே அறியவேணும். நடாதூரம்மாள் கலி 4267 பார்த்திவ வருஷத்தில் அவதரித்து நூறுண்டு ஜீவித்திருந்து பரமபதித்தாரென்றும், தேசிகன் 4370ல் அவதரித்தாரென்றும் ஸ்பஷ்டமாக எழுதியுள்ள பிறர்கள் அம்மாள் பரமபதித்தபின் மூன்று வருஷங்கடந்த பின்னரே தேசிகன் திருவவதரித்தாரென்பதை நிர்விவாதமாக்கிவைத்து, அந்த அம்மாளுடைய காலக்ஷேபகோஷ்டியில் தேசிகன் இளமையில் எழுந்தருளினாரென்றும் எழுதிவைத்திருக்கிற ஸாவிசேஷங்களைப்பார்த்தால், பிறருடைய க்ரந்தங்களிலே அவத்யங்கூறவும் அவர்களுக்கு எண்ணமுண்டாகுமோ? ஒருகாலும் அவர்கள் தலையிட்டுப் பங்கமடையார் என்றும் சிலர் தெரிவிக்கிறார்கள். ... . ... ... ...

அண்ணாவுக்கு ஞானமே கிடையாதென்றும், ஜ்ஞாதா என்ற காரணத்தினால் அவர் வாதத்திற்கு வரதகுருவால் அனுப்பப்படவில்லையென்றும் எதிரி புந: புந: எழுதுகிறார். தயாஸு. மஹாநஸ கைங்கரியமேதான் அவர்க்குத் தெரியுமென்றும் வ்யக்தமாகச் சொல்லட்டும். * ஞானஹீனோவதந யீதூஸூாஹ வெஷாநஸெஷாநு என்னப்பட்ட ஒரு ஆழ்வார் ஆனியில் அவதரித்தாப்போலே அப்படிப்பட்ட ஒரு ஆசாரியர் ஆடியிலவதரித்தாரென்று போற்றுகிறோம்.

*சுநஸூஸுவஸஹோயசுநு சுஹூஹூஜவ ஹூஎரிஸ: ஸுவஸா ஜஜ வஸஂவிஸாஹூஷாவாயவெரிஞூஹாசு॥ * என்று அண்ணா தாமே அநுஸந்தித்ததாக வடகலை குருபரம்பரையில் எழுதப்பட்டிருக்கிறதாம். அது கொண்டுதான் அண்ணாவுக்கு ஒன்றுந் தெரியாதென்று சொல்லுகிறாராம். .* மூர்க்கனேன் வந்துநின்றேன் மூர்க்கனேன் மூர்க்கனேனே * என்றும் இங்ஙனே பலவும் அநுஸந்தித்த ஆழ்வார்களையும் ஆசார்யர்களையும் மூர்க்கர்கள் பாபிகள் என்று க்ரந்தமெழுத என்றைக்கு நாள் பார்த்திருக்கிறாரோ? அது கிடக்க. அவ்யுத்பந்நசிகாமணியொருவன் திருமித்த அந்தச்லோகத்தை இந்த வித்வச்சிகாமணியும் உதாஹரித்து ப்ரஸங்கித்துவிட்டார்; இதற்கு எப்படி அந்வயம்? என்ன அர்த்தம்? என்று இவர் சொல்லிவிடுவரேல் நாடோறும் முச்சந்தியும் இவரையே தொழுவோம். அந்தோ! நிரக்ஷரகுக்ஷிகளைநோக்கி நமக்கு ஈதென்ன வீண் ப்ரதிஜ்ஞை!